# ஞானசாகரம்
# பதுமம் 5, இதழ்கள் 11/12
# சாதாரண, வைகாசி / ஆனி
# [May / July 1910]

Record no. 66

Registered No. M. 301.

ஓம்.

# ஞானசாகரம்.

ஓர் உயர்ந்த செந்தமிழ் மாதப்பத்திரிகை.

பதுமம், 5.] சாதாரண௵ வைகாசி, ஆனி௴ [இதழ்கள், 11, 12.

பொருளடக்கம்.



பத்திரிகாசிரியர்
சுவாமி வேதாசலம் அவர்கள்.
சமரசசன்மார்க்கநிலையக் குருபோதகர்,
பல்லாவரம்.

சென்னை,
பிரஸிடென்ஸி அச்சியந்திரசாலையில்
முத்திரிக்கப்பட்டது.
1911.

ஒருபதுமக் கையொப்பம். மூன்று ரூபா.

ஓம்.

## ஞானசாகர ஆரம்பதுமம்.

### இதில் வெளிவரும் விஷயங்கள்.

மனித வசியம்.
மக்கள் நூறுவருஷம் உயிர்வாழ்தல் எப்படி?
மரணத்தின்பின் மனிதர்நிலை.
இறந்தவர்களோடு எளிதிற்பேசுதல்.
நாகநாட்டரசி குமுதவல்லி (இரண்டாம் பாகம்).
கோகிலாம்பாள் கடிதங்கள்.
சிவஞானபோத ஆராய்ச்சி.
திருக்குறளாராய்ச்சி.

இவ்வரிய பெரிய விஷயங்கள் அவ்வளவும் முடிவு பெற்றவுடன் தனித்தனிப் புத்தகங்களாகப்பிரித்துக் கட்டிக்கொள்ளும்படியான வகையிலே இப்பத்திரிகையில் எழுதி வெளியிடப்பட்டு வருகின்றன. இதுபோல இவ்வளவு அருமையான விஷயங்கள் மற்றத் தமிழ்ப்பத்திரிகைகளில் இது வரையிலும் பிரசுரிக்கப் பட்டதில்லை.

இப்பத்திரிகையில் வரும் இவ்விஷயங்களை ஒவ்வொருவரும் கவனமாகப் படிப்பார்களானல் நல்வழியில் மிகுந்த செல்வத்தை அடையும் நெறியும், நீண்ட நாள் உயிர்வாழும் வகையும், மருந்துண்ணுமல் நோய் நீக்கும் முறையும், பிறரை வசியப்படுத்தும் விதமும், இறந்துபோன தம் உற்றார் உறவினரோடு உறவாடி வாழும் ஆறும், தம் புதல்வர் புதல்வியரைத் தாம்விரும்பியபடி நடத்தும் வல்லமையும், எல்லாக்காரியங்களிலும் எளிதிலே சித்தி பெறும் இயற்கையும் தெரிந்து மிகவும் இன்புற்று வாழ்வார்கள்.

இந்தப்பத்திரிகையில் வெளிவரும் நாகநாட்டரசி போன்ற அருந்தமிழ்க்கதைகளைப் படிப்பதனல் நாடோறும் தேகப்பிரயாசை மனமுயற்சிகளால் உண்டாகும் இளைப்பு நீங்கி, மிகுந்த உற்சாகமும் களிப்பும் அடைந்து, பலவகை நீதிகளை உணர்ந்து இன்புற்றிருப்பார்கள்.

நமக்குத் தாய்மொழியான நமது செந்தமிழிலே நல்ல விற்பன்னம் அடையவேண்டுவது தமிழர் ஒவ்வொருவருக்கும் அவசியமான கடமையாகும். அப்படிப்பட்ட தமிழ்ப்புலமையை எளிதிலே அடைந்து வல்லவர்கள் ஆவதற்கு நமது ஞானசாகரப் பத்திரிகையில் வெளிவரும் விஷயங்களைப்படித்துப் பழகுதலே போதும்.



யிருக்கச்சமயம் வந்தது. அப்போது அவள் தன் கணவனை மிக்க அன்புடன் பார்த்து "என் ஆருயிர்க்காதலனே, யான் ஏதொரு குற்றமும் செய்யாதிருக்கவும், வீட்டுக்காரியங்கள் அவ்வளவும் யாரும் செய்யாமல் யான் ஒருத்தியேமுற்றும் கவனித்து என்னல் இயன்றவளவு மனவருத்தத்திற்கு இடனின்றிச்செய்து வரவும், மனத்திற் கள்ளமின்றி யான் எல்லாரிடத்தும் அன்பு பாராட்டி வரவும் என்னை அன்புடன் பாராமல் என் மாமியும் நாத்துணரும் எனக்குச்செய்துவருங் கொடுமைகள் இவ்வளவென்று என்னுற் சொல்ல முடியாது. யான் என் செய்வேன்! என் பிரிய மணவாளரே, தாங்களே என் நிலைமையை அறிந்து என்னைத் துன்பத்தினின்று அகற்றுவீர்கள் என்று எதிர்பார்த்தேன்; தாங்களும் கவனிக்கவில்லை. தங்களுடன் என் குறையை யாவது எடுத்துச்சொல்ல நாம் இருவேமும் தனியே யிருக்கச் சமயம் வாய்க்குமாவென்று எதிர்பார்த்தேன். நெடுநாளாக அதுவும் வாய்க்கவில்லை. இன்றைக்கு ஏதோ தெய்வகதியாய்த் தங்களைத்தனியே சந்திக்க நல்லதிர்ஷ்டம் பெற்றேன்." என்றனள். இவ்வரிய பெண்ணின் கணவனே இயற்கையில் நுட்ப அறிவில்லாதவனுதலால், இவள் கூறிய இச்சொற்களைக்கேட்டும் அவற்றின் நுணுக்கத்தையும், தன்மனைவியின் அருமைக்குணத்தையும் தெரிந்துகொள்ள மாட்டாதவனுய் அலட்சியமாக 'மாமி மருமக்கள்மார்க்கு இது வழக்கந்தான். இவையெல்லாம் என் காதிற் போடாதே' என்று சொல்லிப் போய்விட்டான். பிறகு அவள் தன் தலைவிதியை நொந்துகொண்டு, ஒரு நாள் மாமி நாத்துணரைப்பார்த்து "நீங்கள் காலால் இட்ட வேலையை யான் தலையாற்செய்யக் காத்திருக்கிறேன். ஆனுல், நீங்கள் மாத்திரம் பட்சமாய் மலர்ந்த முகத்தோடு என்னை நடத்திவந்தால் அதுவே எனக்குப்போதும்" என்று கெஞ்சிக்கேட்டாள். இவ்வினிய சொற்கள் அக்கொடியாரிருவருக்கும் இனிமையைத்தராமல் நாராசத்தைக்காய்ச்சிக் காதிற் செருகினதுபோல் இருந்தன. உடனே அவர்கள் இருவரும் விளக்குமாறும் தடியும் எடுத்துக்கொண்டு அமிர்தவல்லி போன்ற அப்பெண்ணை உடம்பெங்கும் நன்றாக நைய நறுக்கிப்புடைத்தார்கள். அப்பெண்ணே பொறுக்கக்கூடாத அவ்வடிகளைப் பெற்றுக்கொண்டும் வாய் திறவா

8

மலும் எழுந்திருக்கக்கூடாமலும் கிடந்தாள். அன்றிரவு வீட்டுக்கு வந்த அவள் கணவன் எப்போதும் போலத் தன் மனைவியைக் கவனியாமலே இருந்துவிட்டான். அன்றிரவு அப்பெண்ணுக்கு உடம்பின் நோயும் மனநோயும் மிகுதிப்பட்டன. இனித்தான் இவ்வுலகில் உயிர்வாழ்வதிற்பயனில்லையென்று கண்டாள். தன் உயிரை இன்றைக்கே மாய்த்து விடுதல் தான் தக்கதென்று தீர்மானித்தாள். நள்ளிரவில் எல்லாரும் அயர்ந்துறங்கும்போது அவள் மெல்ல மெல்ல நகர்ந்து வீட்டின் புழக்கடைப்பக்கத்திலிருந்த கிணற்றண்டைபோய் எழுந்துநின்று "யான் இறந்துபோன பிறகு ஆவேசமாய் நின்று என் மாமியையும் நாத்துணாரையும் மிகவும் துன்புறுத்தி அவர்கள்உயிரைக் கொள்ளைகொள்ளக்கடவேன்." என்று உறுதிசெய்துகொண்டு கிணற்றிற்குதித்து மாண்டாள். அவள் விழுந்ததனால் உண்டான ஓசை வீட்டிலிருந்தவர்கள் யார்க்குங்கேட்கவில்லை. வீடு மிக அகன்றதொன்றாயிருந்தமையினாலும் எல்லாரும் அயர்ந்து உறங்கினமையினாலும் அவ்வோசை கேட்டிலதுபோலும். விடியற்காலையிலெழுந்தவர்கள் கிணற்றிற் பார்க்க அப்பெண் பிணமாய்க்கிடத்தலைக்கண்டு திடுக்கிட்டு ஓல மிட்டார்கள். அப்பெண்ணின் கணவன், மாமனார் முதலிய எல்லாரும் வந்து பார்த்துப் பிணத்தை மேலெடுத்து, முதனாளும் அதற்கு மேற்பட்ட நாட்களிலும் மாமி நாத்துணாரால் அப்பெண் குரூரமாய் நடத்தப்பட்ட விவரமெல்லாம் கேட்டறிந்தார்கள்.

இவ்வாறு அப்பெண் இறந்து பத்துப் பதினைந்து நாட்கள் ஆயின. அவள் மாமியும் நாத்துணாரும் வெளிக்கு விசனம் உடையவர்கள்போற் காட்டினாலும், அவள் இறந்தொழிந்தமைபற்றி உள்ளுக்குள்ளே மிகவும் மகிழ்ந்திருந்தார்கள். அவள் கணவனோ பிறகு தன்மனைவியின் அருமைக்குணங்களைத் தெரிந்து, தன் மனைவியைக் கொன்றவர்கள் தன்தாயும் சகோதரியுமே என்று உண்மை உணர்ந்து துயரக்கடலுள் ஆழ்ந்தான். அப்பெண்மணி யில்லாதஅவ்வீடு பொலிவிழந்து வெறும்பாழாய்க் காணப்பட்டது. அவ்வீட்டிலுள்ளவர்கள் முகமெல்லாம்கருகிக் களையின்றி வற்றிப் பாழ்அடையலாயின. இராக்காலம் அவ்வீட்டினுள் அமைதியில்லாத தாயிற்று. பொல்லா நெஞ்சினரான



மாமியும் நாத்துணாளும் நல்லுறக்கங் கொள்ளாமல் பெருந்திகிலால் துடித்தார்கள். இரவில் ஏதோர் ஓசையும் இன்றியிருக்கையில் திடீரென்று ஓர் அழுகுரல்கேட்டது. பின்னுஞ் சிறிது நேரத்தில் அவ்வோசை அடங்கி அவ்வீட்டில் யாரோ நடப்பதுபோலச் சரசரவென்னும் ஓர்ஒலி உண்டாயிற்று. பின்னுஞ் சிறிதுநேரத்தில் "ஐயோ! ஐயோ!! அடிக்கிறாளே! அடிக்கிறாளே!!" என்று பெருங்கூக்குரல் எழுந்தது. அதுகேட்டதும், எல்லாரும் எழுந்து அவ்வோசை வந்தவிடத்திற்கு ஓடிப்போய்ப் பார்க்க, நாத்துணாள் தான் படுத்திருந்த விடத்தினின்றும் பரபரவென்று இழுக்கப்பட்டு உலக்கையால் அடிபட்டுக்கிடந்தாள். அவளை எடுத்துத்தேற்றி நடந்தது என்னவென்று கேட்க, "ஐயோ! இறந்துபோன அண்ணி இதோவந்து என்னைப் பரபரவென்று இழுத்துப்போட்டு உலக்கையால் அடித்தாளே. அவ்வடி என்னால் தாங்கமுடியவில்லையே. இதோ என்னை மறுபடியும் உருத்துப்பார்க்கிறாள்; பல்லைக்கடிக்கிறாள்; ஐயோ! என்ன செய்வேன்! இதோ மறுபடியும் உலக்கையை எடுக்கிறாளே!" என்று அவள் சொல்லும்போதே, அங்கே ஓரிடத்திலிருந்த உலக்கையானது திடீரென்று அந்தரத்தில்வந்து அவள் முதுகில் தாக்கியது; சுற்றிலும் உள்ளவர்கள் அதைப் பிடித்தார்கள்; அங்ஙனம் அவர்கள் அதைப்பிடிக்கையில் அஃது அவர்கள் கையைவிட்டு நழுவிப்போயிற்று. இங்ஙனமே அந்த நாத்துணாளை இறந்துபோனவளின் ஆவேசம் ஒவ்வோர் இரவும் வருத்துவதாயிற்று. வீட்டிலுள்ள ஆண்மக்கள் எல்லாரும் எத்தனையோ பரிகாரங்களும் மந்திரங்களும் செய்துபார்த்தும் ஒன்றும் பயன்படவில்லை. நாளேற நாளேற அந்தவீட்டிற் கூக்குரல் மிகுதிப்படலாயிற்று. அந்த நாத்துணாள் தன்படுக்கையில் நின்றும் திடீரென மேலே தூக்கப்பட்டுப் பொத்தென்று கீழே வீழ்த்தப்பட்டாள்; அவள் உண்ணுஞ்சோற்றிலே அசுத்தமான பொருள்கள்வந்து வீழ்ந்தன; ஒவ்வொருநாள் விளக்குமாற்றால் அடிபட்டாள்; ஒவ்வொருநாள் அவள்மேல் சாணத்தண்ணீர்வந்து வீழ்ந்தது; ஒவ்வொருநாள் தடியால் அடிபட்டு அவள் உடம்பெங்குங் கன்றி இரத்தங்கட்டின; இவ்வாறு ஒரு மாதம்வரையில் அவள்பட்ட துன்பங்களுக்குக் கணக்கில்லை.

இங்ஙனந் துன்பப்படும்போதெல்லாம் "இந்தப்பாவி என்னை அடிக்கிறுளே; கடிக்கிறுளே; உதைக்கிறுளே சிதைக்கிறுளே" என்று சொல்லுவதும், இகழ்வதும், திட்டுவதும் அன்றி, அவள் உயிரோடு இருந்தபோது நாம் எவ்வளவு துன்பம் அவளுக்குச் செய்தோம் என்று சிறிதும் நினையாமலும் நாம்செய்தது தவரு யிற்றே என்று மனம் இரங்காமலுங் கடினசித்தம் உடைய வளாயிருந்தாள். நாளேற, நாளேற இத்துன்பங்களால் அந் நாத்துனள் உடம்பு இளைத்து எலும்பு வெளித்தோன்றி ஊதி ஞற்பறக்கும் இயல்பு உடையவளாஞள். இப்படியெல்லாம் ஒருமாதம் கழிந்தது. ஒருநாளிரவு எல்லாம் ஓர்ஓசையும் இன்றி அமைதியாயிருந்தது. அவ்வீட்டிலுள்ள எல்லாரும் மிகவும் அயர்ந்து உறங்கினர்கள். கதிரவன் கீழ்த்திசையிற்ருேன்றுஞ் சமயமாயிருந்தது. அப்போது, இறந்துபோன அப்பெண்ணின் கணவன் ஒருகனவுகண்டான்: தன்மனைவி தன்பக்கத்தில் மிக வும் அமைதியோடும் நின்றுகொண்டு தன்னுடன் பேசுவதாக நினைத்தான். முதலிற் சிலநேரம் அவள்பேசுவது இன்னதென்று தெரிந்துகொள்ளக் கூடவில்லை; அதன்பிறகு அவன் உற்றுக் கேட்கையில் "என் ஆருயிர்க்காதலனே, நான் உயிரோடு இருந்த போது நான் உம்மை அணுகவொட்டாமல் பலவகையாலும் என்னை வருத்திவந்த உமதுசகோதரி ஒழிந்தாள்; என் அன்புள்ள நாயகனே, நான் உமக்கு ஏதுந்தீங்குசெய்வேன் என்று எண்ணு தீர்கள். உம்மை என்கண்மணிபோற் பாதுகாத்துவருவேன்; நான் உயிரோடு இருக்கும்போது நீர்என்னிடம் அன்புபாராட்ட விடினும், இப்போதாயினும் என்னிடம் நீர் அன்புபாராட்டிவரு வீராஞல் அஃதொன்றுமே எனக்குப்போதும்." என்று பேசக் கேட்டான். அதுகேட்டவன் திடுக்கிட்டு எழுந்தான். எழுந்து தன் சகோதரி படுத்திருந்த இடத்திற்கு ஓடினன். அங்கே அவளைக் காணவில்லை. இவன்செய்த அரவத்தால் வீட்டிலுள்ள எல்லாரும் விழித்துக்கொண்டார்கள். வீடெங்கும் அவளைத் தேடினர்கள்; எங்குங்காணவில்லை. பிறகு வீட்டிலுள்ள கிணற் றிற் போய்ப்பார்க்க அவள் அதிற் பிணமாய் மிதக்கக்கண்டார் கள்.



இங்ஙனம் இவள் இறந்த பிறகு இரண்டு வாரங்கள் வரை யில் அவ்வீட்டில் எவ்வகையான கலவரமும் இல்லாதிருந்தது; எல்லாம் அமைதியாகவேயிருந்தது. தன் மகள் இறந்ததால் உண்டான வருத்தம் அவள் தாய்க்கும், தன் மனைவியையும் சகோதரியையும் இழந்ததால் உண்டான வருத்தம் அவ்வீட்டின் இளைய எசமானனுக்கும் தன் மருமகளையும் மகளையும் இழந்த மையால் உண்டானதுயரம் அவ்வீட்டிற்குடையவரான வைத் திய பண்டிதருக்கும் அன்றி மற்றெல்லாம் அமைதியாகவே இருந்தன—தன் மருமகளை இழந்தது பற்றி இப்பண்டிதர் மனம் மிக வருந்திஞரே யல்லாமல் அவள் மாமி சிறிதும் வருந்த வில்லை. அவளோ தன் மகள் இறந்தவருத்தத்தை மிகவும் பாராட் டி வந்தாள். இங்ஙனம் ஒருமாதஞ் சென்றது.

ஆனல், அம்மாமியாரின் அறிவு நாளுக்குநாள் ஒரு நிலைப் படாமல் வந்தது; சிறிதுசிறிதாகத் தன்நினைவையும் இழந்து வந்தாள்; தான் இன்னுள் என்பதையுங்கூடச் சிற்சில சமயங் களில் மறந்துபோனுள். பைத்தியங் கொண்டவர்கட்கு உள்ள செய்கையெல்லாம் இவளிடத்துங் காணப்பட்டன. இதற்காக ஆங்கிலவைத்தியபண்டிதரான இவள்கணவனும் இவள்மகனும் இவளுக்குவந்த இச்சித்தபிரமையை நீக்கச் செய்தபரிகாரங்க ளுக்கு ஓர் அளவே இல்லை. இப்படியெல்லாஞ் சிலவாரங்கள் கழிந்தன. இஃதிப்படியிருக்க.

திடீரென்று ஒருநாள் விடியற்காலையில் நாகபட்டினத்தின் கடற்கரையருகிலே ஒருபிணம் வந்து ஒதுங்கிக் கிடக்கிறதென் னும் ஒருசொல் எங்கும் உலாவியது. ஊரவர்களிற் பலர் அங்கே அதனைப் பார்ப்பதற்குப் போய்க் கூடினர். ஊர்காவற் சேவகர் களும் ஆங்கிலவைத்திய பண்டிதர்களும் அங்கே அதனைப் பரி சோதனை செய்தற்கென்று போய்ச் சேர்ந்தனர். இங்ஙனஞ் சேர்ந்து நின்றவர்களில் ஒருவருடைய பார்வை அப்பிணத்தின் மேல் விழுந்தமாத்திரத்திலே அவர் கண்களில் நீர் துளித்துளி யாய் விழுந்தது; அவர் உடலம் பதறியது; வாய்குழறியது; தன் னைமறந்தோடி அப்பிணத்தின்மேல் விழுந்து அலறினர். அவர் யாரென்பீரேல், இச்சரித்திரத்திற் சம்பந்தப்பட்ட ஆங்கில

வைத்திய பண்டிதரென்று தெரிமின்கள்; அப்பிணம் தன்மருமகளை வருத்தி மடிவித்த மாமியாரேயல்லது வேறன்று. அப்பிணத்தின் முடிமுதல் அடிகாறும் துணியினுல் வரிந்து கட்டப்பட்டிருந்தது; நெற்றியில் தீட்டிய குங்குமஞ் சிறிது கலைந்திருந்தது. இம்மாமி தன் வீட்டிலிருந்து நள்ளிரவிலே புறப்பட்டு எவ்வாறு வந்தாள், எப்படிக்கடலிலேவீழ்ந்தாள் என்பதுயார்க்குமே தெரியாது. இவள் கணவனுரான ஆங்கிலவைத்திய பண்டிதர் ஒவ்வொருநாளும் விடியற்காலையில் வெளியே கடற்கரை வரையில் உலவப்போவது வழக்கம். அங்ஙனம் போகும் இவர் சடுதியிலே ஒரு பிணம் கடற்கரையில் வந்து ஒதுங்கிக்கிடக்கிறதென்னுஞ் சொல்லைக் கேட்டவுடன் அதனிடம்வந்து கடைசியாக அது தன்மனைவியாகவே இருக்கக்கண்டு மிகவுந் துன்புற்றுனைந்தார்.

மாமியார் இறந்ததன்பிறகு, இவளையும் இவள்மகளையுங் கொன்ற மருமகளின் ஆவேசம் அவ்வீட்டில் ஏதும் ஆரவாரஞ் செய்தலின்றி ஒழிந்தது. என்றாலும், இந்நிகழ்ச்சியின் பிறகு அவ்வீடு செழிக்கவில்லை. சிலநாளில் அவ்வாங்கில வைத்தியபண்டிதரும் இறந்தார். அவ்வீட்டுக்கு உடையரான அவர்மகனும் அதனைப் பிறர்க்கு விற்றுவிட்டு எங்கேயோ போய்விட்டார். இங்ஙனம் அந்தக்குடும்பமே பாழாய்ப்போய்விட்டது.

இவ்வரலாற்றினுல் அறியக்கிடக்கும் உண்மையாது? பிறரால் நீதியின்றி அளவுக்குமேல் துன்புறுத்தப்பட்டவர்கள் தாம் இறக்குங்காலத்துத் தமக்குத் தீங்கு செய்தவரிடம் பழிக்குப்பழி வாங்கவேண்டு மென்னும் எண்ணத்தோடும் உறுதிகொண்டு போவார்களானல், அவர்கள் இறந்தபிறகுசிலநாட்களிலெல்லாம் தமது சூக்கும சரீரத்தில் அந்நினைவுக்கேற்ற வலிவுஅடைந்து, தமக்குத் தீங்கிழைத்தவர்க்குப் பொறுக்கலாகாத பெருந்துன்பத்தைவிளைக்கின்றார்கள்என்பதேயாம். இதனைப்போலவேநடந்த உண்மை வரலாறுகள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன; அவையெல்லாம் இங்கெடுத்துக் காட்டப்புகுந்தால் இஃது அளவின்றி விரிந்துபோகும். இவ்வரலாறுகளின் காரணத்தை மாத்திரம் உற்று நோக்குவேமாயின், துன்புறுத்தப்பட்டவர்கள்



இறக்கும்போது மாத்திரம் பழிவாங்க உறுதிகொண்டு விடுவராயின்; தாம் இறந்தபிறகுந் தம்மெண்ணத்தைக் கட்டாயம் நிறைவேற்றுவிப்பரென்பது திண்ணமென்றல் செவ்வையாக விளங்குகின்றது. ஆகையால், தம் உயிரை விரும்புபவர்கள் பிறவுயிர்கட்குத் தீங்கு இயற்றாது இருக்கக்கடவராக. இதுபற்றியன்றே இவ்வுண்மைகள் எல்லாம் முற்றவுணர்ந்த முதலாசிரியரான திருவள்ளுவ நாயனுர், “பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா பிற்பகற்றாமே வரும்” என்று அருளிச்செய்வாராயினர். முதற் பொழுதிற் பிறர்க்கு ஒருவன் ஒரு தீமையினைச் செய்வனுனல், அத்தீமை செய்தவனுக்குப் பிற்பொழுதில் அவசியம் வந்தே தீரும். மற்றக்கீழ்த்தர உயிர்கட்கு இல்லாப் பகுத்தறிவு பகுத்துணர்ச்சிகள் மனிதப்பிறவியில் காணப்படுதலால், அப்பகுத்தறிவுணர்ச்சிகொண்டு மனிதர் தமக்குத்தீங்கு செய்தார்க்குத்தாமும் இப்பிறவியிலேயே தீங்கு செய்ய முன்நிற்பர்; இப்பிறவியிற் செய்யலாகாவிட்டால் மறுபிறவியிற் சூக்கும சரீரத்திற் சென்றமாத்திரையானே பழிக்குப் பழிவாங்குவர்; சூக்கும சரீரத்தினும் பழிவாங்க ஏலாவிட்டால் திரும்பவும் மனிதப் பிறவியிற் பிறந்து பழிவாங்குவர். எத்தனை பிறவி எடுத்தாயினும் பழிக்குப் பழிவாங்காமல் மாத்திரம் விடார்.

அதுகிடக்க. சூக்கும சரீரத்தினும் பழிவாங்க ஏலாவிட்டால் மறுபடியும் மனிதப்பிறவி எடுத்தாயினும் அதனை முடிப்பரெனக்கூறியதேன் என்றாற் கூறுகின்றாம். உடனே பழிக்குப் பழிவாங்குதலும், சிறிது பொறுத்துப் பழிவாங்குதலும், சூக்கும சரீரத்திற் போனவுடன் பழிவாங்குதலும், அல்லது அதுவுங் கழித்து வேறொரு மனிதப்பிறவி யெடுத்தபின் அவ்வாறு செய்தலும் ஆகிய இவையெல்லாம், துன்புறுத்தப்பட்டவர் நிலைமைக்கும், அவர் அதனைத்தாங்கும் அளவுக்கும், அவர் மனத்தில் ஏறிய வைரத்திற்கும், அவர் அறிவின் வலிமைக்கும் ஏற்ற வகையாய் வந்து பொருந்தும். இவற்றுள் ஒவ்வொன்றனையும் அடைவே விளக்கிக்காட்டுவோம்.

ஒருவன் தன்னினும் மேம்பட்ட செல்வம் உடையார்க்குத் தீங்கு செய்வனுனல் அவர் தமக்கு மிகுதியாய் உள்ள செல்வ வளத்தால் பலரைத்தமக்குத் துணைகொண்டு தீங்கு செய்தவனை

உடனே எளிதில் வருத்திப் பழியைத் தீர்த்துக்கொள்வர். இவ்வாறன்றி மிகுந்த செல்வம் உடையான் ஒருவன் தன்னினும் மிகத்தாழ்ந்த ஏழை ஒருவனுக்குத் தீங்கு செய்வன் ஆனல், அவ்வேழை தானும் அவனுக்கு உடனே தீங்கு செய்யமாட்டாமையின் தான் அது செய்தற்குச் சமயம் வாய்க்குந்தனையும் சும்மா இருப்பன்.

இன்னும் நல்லவர் ஒருவர்க்கு ஒருவன் தீங்கு செய்துவந்தால் அவர் தமது நற்குண மிகுதியால் அத்தீங்கினை ஒருபொருட்படுத்தாது அலட்சியமாய் விட்டிருப்பராதலால், அவர் அதனைச் செய்தவனுக்கு உடனே தாமும் தீங்கு செய்யாமல் 'இன்னும் பார்ப்போம், இன்னும் பார்ப்போம்' என்று விட்டிருப்பர். அங்ஙனம் இன்றிப் பொல்லாதவன் ஒருவனுக்கு மற்றொருவன் ஒரு தீங்கு செய்தால், அவன் தன் பொல்லாத குணத்தால் உந்தப்பட்டு உடனே மற்றவனுக்குத் தானும் தீங்கு இயற்றிவிடுவன்.

இனிப் பிறர் பழியினை மிகுதியும் பாராட்டி மனவைரம் கொள்ளாதவனுக்கு ஒருவன் தீங்குசெய்து வந்தால் அவன் அதனை மிகுதியும் பாராட்டான் ஆகையால், தீங்கிழைத்தவனுக்குத் தன் மனம் வைரம் ஏறும் அளவும் தான் ஏதும் இன்னல் இயற்றுமலே ஒழுகுவான். எளிதில் வைரம் ஏறும் ஒருவனுக்கு அங்ஙனந் தீங்கு செய்யப்படுமாயின் தீங்கு செய்தவன் அவனல் உடனே தண்டிக்கப்படுதல் திண்ணமாமென்க.

இனி அறிவின் நுட்பங்கள் வாய்ந்தார் ஒருவர்க்கு ஒருவன் தீது செய்வனுனல், அவர் தம் அறிவின் நுட்பத்தால் மிக இலேசிலே அவனுக்குப்பலவகையில் துன்பத்தை விளைவித்துத்தண்டிப்பர். அறிவில்லான் ஒருவனுக்குப் பிறனொருவன் இன்னா செய்தால், அவன் தன் அறிவின்மையால் அவனுக்கு அதனைத்திருப்பிச்செய்தற்குரிய வழி வகைகள் தெரியாமல் சும்மா இருந்துவிடுவன். இங்ஙனம் இப்பிறவியிலேயே தனக்குத் தீதுசெய்தவனுக்குத் தானும் தீங்கு செய்தல் பலதிறப்பட்டு ஏறியுங்குறைந்தும் விரைந்தும் தாழ்த்தும் நடைபெறுதலை நமதனுபவத்திற் காண்கின்றோம் அன்றோ? இதுபோலவே ஏனைப்பிறவிகளினும் வைத்து அறிந்து கொளல்வேண்டும்.



துப்பார்க்கையில், அவர்களுடம்பில் முன்னே உண்டு பண்ணப்பட்ட மேகரணங்கள் எல்லாம் முற்றும் ஒழிந்து போக அவர்கள் சரீரம் சுத்தரத்தம் மிகுந்து சுகமுடையதாயிருக்கக்கண்டார். அது முதல், பகலவன் ஒளியே இரத்தசுத்திக்கும் தேக சுகத்திற்கும் முதன்மையான காரணமாகும் என்று முடிவு கட்டினர். ஆகவே, பகலவன் வெளிச்சம் நம்மேற்படும்படி செய்துகொள்வது நமதுடம்பினை அமிர்த வுருவாக்குவதற்கு இன்றியமையாக் காரணமாமென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெற்றென விளங்கற்பாலதேயாம்.

அவ்வாருயின், நாகரிக வாழ்க்கையிலுள்ள நம்மனோர் மேலாடையின்றி நிருவாணமாக உலவுவராயின், அவர் உன்மத்தரென்று இகழப்பட்டுச் சிறைக்களத்தே இடப்படுவரேயெனின்;— அறியாது கூறினுய், கதிரவனொளி உடம்பெங்கும் படும்படி செய்துகொள்ளல் வேண்டும் என்று யாம் சொல்லியது கொண்டே யாம் நிருவாணமாக உலவும்படி கூறினேம் என்று கருதுதல் பெரியதோர் அறியாமையாம். பின்னை என்னையோவெனின், நாம் வசிக்கும் இல்லங்களிலே வெயிற் காய்வதற்கென்று மேலே திறப்பாகவிட்ட தனி அறை ஒன்று இருக்கவேண்டும். அவ்வறையினுள்ளே சென்று கதவைத் தாழ் இட்ட பிறகு ஆடையை முழுதுங் களைந்துவிட்டுக் குறைந்தது ஒன்றரை நாழிகை யளவு வெயில்மேலே படும்படி காயவேண்டும். இங்ஙனம் நாடோறுமாயினும் வாரத்தில் மூன்று முறையாயினும் வெயிற்காய்ந்து வந்தால் உடம்பினுள்ள விஷப்பொருள்களெல்லாம் தொலைந்துபோகும்; இரத்தம் சுத்தம் அடைந்து உடம்பை உறுதியடையச்செய்யும்; தலைமேல் நரைத்திருந்த மயிர்கள் எல்லாம் நரைமாறிக் கன்னங்கரேல் என்று ஆகும்.

காலைவெயில் பித்தத்தையும், உச்சிவெயில் களைப்பையும் உண்டுபண்ணி உடம்புக்குத்தீமையை விளைக்குமாதலால், இருபத்துநான்கு நாழிகைக்குமேல் சூரியன் மேற்றிசையில் சாயும்போது உண்டாகும் சாய்வெயிலே காய்வதற்கு மிகவும் பொருந்தியதாகும் என்பதனை நுண்ணுணர்வாற் கண்டுகொள்க. நன்று சொன்னீர், அமிர்தவுருவான விந்துசத்தைப் பரப்பும் கதிரவனொளியில் எந்தப்பொழுதில் இருந்தாலும் அது நன்மையையே செய்யவேண்டும் அல்லாமல், காலையிற் பித்தத்தையும் நடுப்பகலிற் களைப்பையும்உண்டு பண்ணுமென்பது யாங்ஙனம் எனின்; "அமிழ்தமேயானாலும் அளவு அறிந்து உண்" என்றபடி, நல்ல பொருளாயிருந்தாலும் அதனைப்பயன்படுத்தும் முறையும் பொழுதும் இடமும் நுட்பமாக உணர்ந்து அனுபவியாவிட்டால் அதுவே தீதுசெய்யும். பரிமளங்கமழும் பருப்புணவாயிருந்தாலும் நிறைய உண்டவயிற்றிலே அதனைச்சேர்த்தால் அது தீமை செய்யுமென்பது நாம் அனுபவத்தில் அறிந்ததில்லையோ? மடவாரோடு கூடிநுகருங் காமவின்பத்தினுஞ் சிறந்தது இவ்வுலகில் வேறு இல்லையாயினும் அதனையும் பொழுதறிந்து உணர்வு உருகி முறைப்பட நுகராவிட்டால் அதுவுந் தீமையே பயத்தல் கண்டாமன்றோ? நமது உடம்பு மென்மையான பொருள்களால் அமைக்கப்பட்ட தொன்றாகையால், அதற்கு எந்தப்பொருளை எக்காலத்தில் ஏற்றுக்கொள்ளுதற்கு இசைவு உண்டோ அதனை அறிந்து அதற்கு ஏற்ப ஒழுகுதலே நீண்ட காலம் உயிர்வாழ்தற்குச் சிறந்ததுணையாகும். சூரியவெப்ப மில்லாமையினாலே இராக்காலத்தில் நிலமுங்காற்றுங் குளிர்ந்து காணப்படும். அப்போது உடம்பினுள் நின்ற வெப்பமுங் குறைந்திருக்கும். திரும்பவுஞ் சூரியன் உதிக்கும் விடியற்காலத்திலே உடம்பினுள்



அடங்கியிருந்த அவ்வெப்பமானது முன்னினுஞ்சிறிது பெருகித்தோன்றும். வெப்பத்தால் மிகுவது பித்தமே ஆகையால், காலைவேளையில் சூரியனெதிரிலே உடம்பிற் பித்தம் மிகும். இயற்கையிலேயே சூரியன் உதிக்கும்போது உடம்பிற் பித்தம் மிகுதிப்படுமானால், பின்னுஞ் சூரியவெப்பம் உடம்பின்மேற் படும்படியிருந்தால் அது பின்னும் மிகுதியாகும் என்பதனை யாம் சொல்லவும் வேண்டுமோ? ஆதலினாற்றான், காலைவெயில் மேற்படும்படி உலாவுதல் நன்று ஆகாது என்று உலகத்தாருங் கூறுகின்றார்கள். அப்படியானால், வெளியே குளிர் மிகுந்தால் அதனை எதிர்த்து நிற்பதற்குப் போதுமான சூடும், வெளியே சூடுமிகுந்தால் அதனை எதிர்க்கப்போதுமான குளிர்ச்சியும் உடம்பிற்காணப்படும் என்று முன் அத்தியாயங்களிற் சொல்லியதற்குமாறாக, இவ்விடத்தே இரவில் நிலங்குளிர்ந்தமையால் உடம்பினுஞ் சூடு குறையும் என்றும், விடியலிலேகதிரவன் தோன்றுதலால்உடம்பிற் சூடுமிகும் என்றும் கூறியது என்னையெனின்; நன்று வினாயினாய், வெளியே குளிர் மிகும்போது உடம்பிற் சூடு காணப்படும் என்று மேல் அத்தியாயங்களிற் கூறியது, உடம்பின் மேற்பாகத்திற் றோலின்மேற் சூடுமிகும் என்றும், பகலில் வெம்மை மிகும்போது உடம்பிற் குளிர்ச்சி காணப்படும் என்றது உடம்பின் மேற்றோலிற் குளிர்ச்சி மிகும் என்றும் அறிவித்தற்கேயாம். குளிர்காற்று மேலே வீசும்போது மேற்றோலில் ஓடும் இரத்தம் இறுகி உறைந்து போகா வண்ணம் மூலாதாரத்திலுள்ள பிராணாக்கினியானது உடம்பின் மேற்பாகத்திற் பரவும்; தீக்காற்று மேலே வீசும்போது மேற்றோலில் ஓடும் இரத்தம் சுவறிப்போகாதபடி மேற்றோல் சூட்டிற் பெரும்பாகம் மூலாதாரத்திற் போய்விடும். இராக்காலத்தில் மூலாதாரத்திலுள்ள

அக்கினியிற் பெரும்பாகம் உடம்பின்மேற்பரவியிருத்த லால், மூலாதாரத்திலே அது குறைந்தேயிருக்கும்; பகற் காலத்திலே உடம்பின்மேலுள்ள சூட்டின் பெரும்பாகம் மூலாதாரத்திற்குப் போதலால் அங்கே அது மிகுதிப் பட்டு எரியும். இவ்வாறு மூலாதாரத்திலே உள்ள அக் கினி விடியற்காலத்திலே மிகுதிப்படும்போது, அதற்கு அருகாமையிலே உள்ள பித்தப்பையானது அவ்வக்கினிச் சுவாலையால் தாவப்பட்டுக் கொதித்து மேலே பொங்கு மென்றறிக. இங்ஙனமாகலின் மேல் அத்தியாயங்களிற் சொல்லியதற்கும் இங்கே சொல்லியதற்குஞ் சிறிதும் மாறுபாடில்லை யென்று சிக்கறுத்து உணர்க. இங்கே உரைத்ததுகொண்டு விடியற்காலையிற் சூரியவெப்பம் மேலே படும்படி யிருத்தல் ஆகாது எனத்தெளிக. சூரிய வெப்பம் மேலேபடப்பட உடம்பின்மேற்பரவியசூடெல் லாந் திரண்டு மூலாதாரத்திற்குப்போய் அங்குள்ள பிராணுக்கினியினை மிகுதிப்படுத்தும்; அது மிகுதிப்பட அதன் பக்கத்தே உள்ள பித்தம் மிகுதிப்படும். சூரிய வெப்பம் மேற்படாவிட்டாற் காலையில் பித்தம் தன் எல்லை கடவாதிருக்கும் என்க. அங்ஙனமாயிற், பகல் முழுதுமே சூரியவெப்பம் பரவிக்கொண்டிருத்தலால், அது மேலே படும்படி எப்போதிருந்தாலும் மூலாதாரத்தீ மிகுந்து பித் தத்தை எழுப்புமே எனின்; அற்றன்று, சூரியன் மேற் றிசையிற் சாயும்போது அதன் வெப்பங்குறைதலோடு எங்குங்குளிர்காற்றும் வீசுதலால், மூலாதாரச்சூடு உடம் பின்மேற் பரவுதலை நாம் அனுபவத்திற் காணலாம்; அவ் வாறு மூலாதாரச் சூடு குறைந்து மேலே பரவும் சாயங் கால வேளையில் சூரிய வெளிச்சம் மேலே படுமானல் அது பித்தத்தைச்சிறிதாயினும் மிகுதிப்படுத்தாது உடம் பைச் சுத்திசெய்து சுகத்தில் வைக்கும். ஆனாலும், கொ



டிய வேனிற் காலத்தில் இருபத்துநான்கு நாழிகையான போதிலும் சூரியவெப்பந் தணியாதிருத்தலால், அது செவ்வையாகத்தணிந்த பிறகுதான் அந்திவெயிலிற்காயத் துவங்கல் வேண்டும். இங்ஙனமெல்லாம் கதிரவன் சூடாறுதல்பார்த்துக் காய்ந்துகொள்ளும் வகை சிறிது ஆழ்ந்து எண்ணவல்லார்க்கெல்லாம் இனிது விளங்குமாத லால் இதனை இன்னும் விரித்துக்கூறுதுநிறுத்துகின்றும்.

---

## ஆரும் அத்தியாயம்.

### நிறம்.

மேல் அத்தியாயத்திற் கதிரவன் ஒளி மனிதவாழ்க்கைக்கு அவசியமாய் இருக்கும் இயல்பும், அதனை நாம் பயன்படுத்திக் கொள்ளும் முறையும் செவ்வையாகவிளக்கிக் காட்டினும். இனி, அக்கதிரவன் ஒளியில் அடங்கியிருக்கும் நிறங்களைப்பற்றியும், அந்நிறங்களை நீண்ட வாழ்க்கையின் பொருட்டுப் பயன்படுத்திக்கொள்ளும் முறைகளைப்பற்றியும் இந்த அத்தியாயத்தில் விளக்கிப் பேசப்போகின்றும்.

சூரியனிடத்திருந்து வரும் வெளிச்சத்தைப் பார்த்தால் வெள்ளைவெளேல் என்றுதான் இருக்கின்றது. நமதுடம்பில் உள்ளமயிர்கள் எல்லாம் சிலிர்த்தால் அவைநேர்பட நெருங்கிநிற்பது போல, சூரிய வெளிச்சத்திலும் மயிரிழையினும் நுட்பமானகதிர்கள் பலதிசை முகங்களினும் கீழும் மேலும் ஆகிய எல்லா இடங்களிலும் நேர்பட நெருங்கிப் பாய்கின்றன. இங்ஙனம் பாயும் எண்ணிறந்த கதிர்களின் தொகுதியையே மக்கள் வெளிச்சம் என்று வழங்கிவருகின்றார்கள். ஒருபானையின்கண் அடக்கிச் சமைத்த ஒரு சோற்றிற்குள்ள பதமே மற்றச் சோறுகளுக்கும் பதமாயிருத்தல் காணப்படுவதுபோல, முழு வெளிச்சத்தினும் அடங்கியிருக்குங் கதிர்களில் ஒருகதிரின் தன்மையே மற்றக்கதிர்களிடத்துங் காணப்படும். நமது வீடுகளின் மேற்கூரையிலுள்ள சிறு தொளையின் வழியே உள்நுழையும் ஒரு சிறு கதிர்த்தொகுதியைக் காண்போமாயின் அதுவும் வெள்ளை வெளேல் என்றுதான் இருக்கின்றது. இங்ஙனம் வீட்டின் அகத்தேநுழை



யும் ஒரு சிறுகதிர்த்தொகுதியும், புறத்தே காணப்படும் முழு வெளிச்சமும் வெள்ளை வெளேல் என்று இருப்பக் காண்டலின், பகலவன் ஒளியிற் பலநிறங்கள் அடங்கியிருக்கின்றன என்பது உண்மையாதல் எங்ஙனமெனிற் காட்டுவாம்.

நாம் காணும் பொருள்கள் நமது ஊனக்கண்ணுற் காண்கிறபடியேதான் இருக்கும் என்று எண்ணுதலைவிடப் பெரியபிழை வேறு உலகில் இல்லை. இருள் மிக்க ஓர் இரவிலே மேல் நிமிர்ந்து வானத்தை நோக்குவேமானல் அளவிறந்த வான்மீன்களைப் பார்க்கின்றேம் அல்லவோ? அவ்வான்மீன்கள் ஒவ்வொன்றும் எவ்வளவு பரிமாணம் உடையதாய் இருக்கின்றது? ஓர் ஆலம்பழம் அளவுகூடப் பெரிதாயில்லை. ஆனல், அம்மீன்கள் இருக்கும் தூரத்தையும், அவை தொலைவுநோக்கிக் கண்ணுடியிற் றோன்றும் பருமனையும் நுண்ணிதாகக் கணக்கிட்டுப் பார்த்தால், அவற்றுள் ஒவ்வொன்றும் நாம் இருக்கும் இம்மண்ணுலகைவிட எத்தனையோமடங்கு பெரிய உலகங்களாயிருப்பதைத் தீரத்தெளியலாம். அவ்வளவுதான் போவானேன்? திருவண்ணமலையிற் கார்த்திகை விளக்குக் கொளுத்த மேலேறிச் செல்வோர் சிலரை நீங்கள் பார்த்திருப்பீர்கள் அன்றே? அம்மனிதர்கள் நுங்கள் கண்கட்கு எவ்வளவு சிறியராய்ப் புலப்படுகின்றனர்! அது கொண்டு அப்போது தோன்றியபடியே அம்மலைமேற் சென்ற மனிதர்கள் சிறு மரப்பாவைபோன்றிருப்பரென எண்ணக்கூடுமோ? கூடாதன்றே? அங்ஙனமே, நம் ஊன விழியாற் காணப்படும் எல்லாப் பொருள்களையும் அவ்விழியாற் காண்கின்றபடியே இருக்குமெனக் கருதுதல் அறிவுடையோர்க்குச் சிறிதும் பொருந்த மாட்டாது. பொருள்களின் இயற்கையைப் பலதிறப்பட்ட பரிசோ

தனைகளாற் கண்டறிந்து தெளிவதே அறிவுக்குப்பயனும். அவ்வாறன்றிக் 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' எனத் திரிவோர் அறிவுபாழ்பட்ட அவலரே யாவர் என்க.

இனிக் கதிரவனொளி வெளிப்பார்வைக்கு வெண்மை நிறம் உடைய்துபோற் றோன்றினும், அஃது உலகத்தி லுள்ள எல்லாநிறங்களையுந் தன்னுட் பொதிந்து வைத் திருக்கின்றது. மூன்று கோணமாக மேற்புறம் பிதுங்க அறுத்த ஒரு சிறு பளிங்குத்துண்டின் ஒருபுறத்திலே கதி ரவன் ஒளியின் ஒரு சிறுகதிரை நுழையவிட்டு, அது புறப்படும் மற்றப்பக்கத்திலே பார்த்தால் அக்கதிர்ஊதா, அவுரி, நீலம், பச்சை, மஞ்சள், கிச்சலி, சிவப்பு முதலிய ஏழுநிறங்களாகப் பகுக்கப்பட்டுத் துலங்குதலை எளிதிற் கண்டுகொள்ளலாம். இது கொண்டு, இவ்வெழுவகை நிறங்களின் வேருக வெண்மைநிறம் என ஒன்று வேறில் லாமை இனிது பெறப்படும். இதுவல்லாமலும், இவ் வெழுவகை வர்ணங்களை எடுத்துச் சேர்க்கும் அளவறிந் து சேர்த்துக்குழைத்தால் வெள்ளைநிறம் உண்டாதலைப் படம் எழுதுவோர்மாட்டுங் கண்டுதெளியலாம். எனவே, எழுவகை நிறங்களின் சேர்க்கையே வெண்மைநிறமல்லது வேறு தனித்த நிறம் ஆகாமை வலியுறுத்தப்பட்டது. அங்ஙனமாயின், கறுப்புநிறம் எதன்கண் அடங்குமெனின்; மேற்கூறியபடி கதிரவன் ஒளி பளிங்குத்துண்டினூடு நுழைந்து அப்புறந்தோன்றுங்காற் காணப்படும் அவ் வெழுவகை நிறங்களின் ஊடே ஊடே கரியநிறக் கம்பி யோட்டங்கள் காணப்படுதலால் அதுவும் இவ்வெழுவ கை நிறங்களுள்ளே அடங்கும் என்று உணர்க. அவ்வா றாயின் அதனையும் ஒன்றாகச் சேர்த்து நிறங்கள் எட்டு என்று உரையாமல் அவை ஏழு என்று உரைத்தது ஏன்



கள் சரித்திரத்தை மெய்ப்பட உணர்ந்த பெரியார் அது வெறும் பொய்க்கதை யெனவும், நெருப்பால் அவர் அருமைத்திருவுருவம் சிறிதும் பழுது பட்டதில்லை யெனவும் உரைப்பக்கேட்டேம். இனிப் பசிதாகங்களும் அருள் ஒளியிற்றோய்ந்த முனிவரரைச் சிறிதும் வருத்துவதில்லை. இதற்குப் பெரியதோர் அற்புதச் சான்றாக நாகபட்டினத்தில் விளங்கும் சிவராசயோகியாரைக் கண்டு எல்லாரும் ஐயம் அகலப்பெறுவார்களாக. சென்ற ஒன்ற ரை ஆண்டுகளாக அன்னந் தண்ணீர் சிறிதும் இன்றிச் சிவநிட் டையில் இருக்கும் இப்பெரியார் அருமைத்திருவுடலம் அன்னந் தண்ணீர் இல்லாமைபற்றி ஒரு சிறிதாயினும் வருந்தாதாய் மாற்றற்ற பொன்வண்ணம்பெற்றுப் பொலிகின்றது; இவரது முகமோ பொற்பதுமையின் படிவம்போலத் திருத்தமுதிர்ந்து பேரொளி வீசுகின்றது; சிரத்திலுள்ள உரோமங்களும் மோவாய் கன்னங்களில் வளர்ந்திருக்கும் உரோமங்களும் கன்னங்கறேல் என்று பளபளப்பாய் மிளிர்கின்றன. இவரது பொதுவான தோற்றமானது தெய்வீக அழகு கனிந்த ஓர் இளம் பாலிய வடிவாய்க்காணப்படுகின்றது. இரண்டு நாட்கள் சேர்ந்தாற் போல் அன்னந்தண்ணீரின்றிப் பட்டினிகிடக்கமுடியாத மக்கள் நிறைந்த இந்நிலவுலகில் இச்சிவராசயோகியார் அன்னந்தண் ணீர் சிறிது மின்றிச் சிவநிட்டையிலிருக்கும்நிலை அற்புதத்தினும் பேர் அற்புத மன்றோ? இதனால் இறைவன் அருள் ஒளியிற் றோய்ந்தவர்களுக்கு இவ்வுலகியற் பொருள்களின் உதவி சிறிதும் வேண்டப்படாது என்பதும், இவ்வுலகத்துப் பொருள்களாற் சிறிதும் துன்பம் எய்தாது என்பதும் தெள்ளிதின் விளங்கும் என்க. அங்ஙனம் உலகத்துப்பொருள்களின் உதவியை அவர் வேண்டாதது என்னையெனின்; உலகத்திலுள்ள எல்லாப்பொ ருள்களையும் எல்லா உயிர்களையும் வைத்துத்தாங்குவது இறை வன் திருவருளேயாகும்; அத்திருவருளைக்காட்டினும் வலிமை யில் மிக்கதும் நன்மையைத்தருவதுமான வேறு பொருள் எங்கும் இல்லை. அத்தன்மைத்தாகிய திருவருளையே தமக்கு ஒப்பற்ற பெருந்துணையாக்கொண்டால் அதனால் அடையாத வலிமையும் நன்மையும் வேறுண்டோ? சொல்லுமின்! ஆகவே இதன் உண்

மையை இனிதுணர்ந்த பெரியோர் எந்நேரமும் இடைவிடாது தமதறிவை அத்திருவருளிலே நிலைபெறவைப்பர்; அவர் அறிவின் ஒருமைத்திறத்தை இவ்வளவென்று வரையறுத்துச்சொல்லல் எவர்க்கும் ஏலாததொன்றும்.

இத்தனையுஞ் சொன்னமையால் நினைவை ஒருவழி நிறுத்தல் ஒவ்வொரு துறையிற் படிப்படியாய் முதிர்ந்து கடைசியாகத் திருவருள் வெளியிற்சென்று ஒன்றுபட்டு நிலைபெயராது என்றும் அவ்வாறே நிற்குந்தன்மை நன்கு விளங்குவதாயிற்று.

---

## நினைவை ஒருவழியில் நிறுத்தும் வழி.

புறத்தேகாணப்பட்டு இன்பந்தரும் ஓவியம், இசை, நாடகம் முதலிய துறைகளிலே யெல்லாம் மக்கள் நினைவு வருத்தம் இன்றியே இலேசாக ஒன்றுபட்டு நின்று விடுகின்றது. இனி அகத்தே வைத்து ஆராயப்படும் நல்லிசைப்புலவர் செய்யுட்களினும் திருவருள் ஒளியினும் அந்நினைவு அங்ஙனம் ஒன்றுபட்டு நிற்றல் மிகவும் வருத்தமாயிருக்கின்றது. பஞ்சேந்திரிய இன்பத்தில் மனிதருக்கு அவா மிகுதிப்படுதல்போல, ஆன்ம இன்பத்தில் அவாவரக் காண்கிலோம். இதற்குக்காரணம் யாது? என்று ஆராயுங்கால், மனிதருக்குள்ள அறியாமையே காரணமென்பது தெற்றெனப்புலப்படுகின்றது. நிலையாத பொருளை நிலையுள்ளதென்று நினைக்கின்றார்கள், நிலையுள்ள பொருளை ஓர் இமையளவேனுஞ் சிந்திக்கின்றார்கள் இல்லை. ‘பொன்னை மாதரைப்பூமி’யைத்தமக்கு நிலையான துணையென்று மயங்குகிறார்கள்; ஞானத்தை நல்லறிவைத்திருவருளைத் தமக்குநிலையென்று நினைப்பதும் இல்லை. பொன்னும் மாதரும் பூமியும் தமக்குத்துணையாய் நிலைப்பது எத்தனை நாள், துணையாய்க்கூடவருவது எங்கே என்று தினையளவாயினுஞ் சிந்திக்கலாகாதா? பொன்னும் பூமியும் அறிவில்லாத பருப்பொருள்கள்; இவற்றை மனிதர் பயன்படுத்தினல் அல்லாமல் இவை தாமாகவே பயன் படுவன அல்ல; பொன் ஒருவர் கையினின்று ஒருவர்கைக்கு மாறும், பூமியோ இருந்த விடத்தேயிருக்க அதனை அனுபவிப்போர் மாறிக்கொண்டேயிருப்பர்; மாதரோ அறிவுடைய உயிர்களாயினும் அவர்



களிற் பெரும்பாலார் பல திறப்பட்ட எண்ணமுடையவர்களாய் ஓர் உறுதியின்றி ஒரு கால் ஒருவனை விரும்பி மற்றொரு கால் மற்றொருவனை விரும்பி ஒழுகும் இயல்புடையவர்; ஒருவனுடைய அருமைபெருமைகளை யுணர்ந்து அவனிடத்தே மாத்திரம் உறுதிப்பட்ட மனமும் மெய்யன்பும் வைத்து ஒழுகுவோர் பெண் மக்களில் மிக அரியர்; மேலும், அம்மாதரைத் தமக்குத்துணையென்று கொள்ளினும் அவர் தங்காதலருக்கு நேர்ந்த நோய் முதலிய துன்பங்களை நீக்கமாட்டுவாரா? காலன்வந்து உயிரைக் கொள்ளை கொள்ளும்போது சாவித்திரியைப்போல அவனைத் தடுக்கவல்லரா? இல்லையே. இங்ஙனமிருக்க அம்மாதர்கள் துணையாவது எப்படி? மேலும், ஒரு பிறவியில் நாம் நமக்குத் துணையாக எண்ணிய பொன்னும் மாதரும் பூமியும் அப்பிறவியொழியும்போது அவைதாமுங் கூடஒழிந்துபோக, மறுபடியும் எடுக்கும் மற்றொரு பிறவியிலே வேறு பொன்னும் வேறு பூமியும் வேறு மாதரும் வந்து சேர்கின்றமை அநுபவத்தில் நாடோறும் காணப்படும் உண்மையாதலை மாந்தர் சிறிதும் அறியாதது என்னே! இங்ஙனமெல்லாம் நிலையில்லாமல் மாறிக்கொண்டிருக்கும் இப்பொருள்களின் தன்மையைப் பகுத்தறிந்து அவற்றிற் கருத்தை ஊன்றாமல் புளியம்பழமும் அதன் ஓடும்போல எல்லாவற்றோடு கூடியுங்கூடாத சிந்தைகொண்டு உள்ளொளியில் நாட்டம் வைத்தலே யாவரும் செயற்பாலதாகிய கடமையாகும்.

இங்ஙனமன்றி வெளிப்பொருள்களில் பற்று மிகுதியாய் வைத்து, அகத்தேயும் தம் நினைவைத் திருப்பித் திருவருளிலே நிறுத்தலாமென்றால், அஃது எவர்க்குங் கூடாதகாரியமாகும். ஏனெனில், புறப்பொருளிற் பற்று வைக்க வைக்க, அகத்தே திருப்பப்படும் நினைவிலே அப்புறப்பொருட் சிந்தனையே இடைவிடாது ஓடிவரும் அல்லது, அந்நினைவு திருவருள் ஒளியை நாட மாட்டாதாகும். எதிலே மனிதர்நினைவு ஊறியதோ அதன் சாரம் அந்நினைவிலே ஏறிநிற்கும். “மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு” என்றதிருவள்ளுவனார் திருவாக்கின் உண்மையைச் சிறிதேனுஞ் சிந்தித்துப்பாருங்கள்! பொன்னையே பொருளையே ஒருவன் சிந்தித்துக்கொண்டிருப்பான் ஆனல், அவன் நினைவு உள்முகமாய்த் திரும்பிய வழியும் அப்பொன்னையே

பொருளையே சிந்திக்கும் அல்லாமல், உணர்வுக்கு உணர்வான அருளை நாடாது. ஏலேலசிங்கர் உள்முகமாய்த் தமது நினைவைத் திருப்பியிருக்கையில், அவர் நினைவு அவர்வியாபாரக் கணக்கில் அழுந்தி அருளை நாடாது இருக்க, அங்கேசென்ற திருவள்ளுவ நாயனார் அவர் நினைவின் நிலைமையைத் தமது அறிவுக்கண்ணாற் கண்டு 'செட்டியார் பூசையில் இல்லை, வியாபாரக் கணக்கிலிருக்கின்றார்.' என்று சொல்ல, அதுகேட்ட ஏலேலசிங்கர் தமது நினைவின் உண்மைகண்டு கூறிய ஆசிரியரைப் பணிந்தனர் என்னும் வரலாறு யாம் உரைப்பதன் உண்மையை இனிது புலப்படுத்தும். அவ்வளவுகூடப் போகவேண்டாம். இதனைப்படிக்கும் ஒவ்வொருவரும் சிறிதுநேரம் தனியே யிருந்து தமது நினைவை உள்ளே திருப்பிப்பார்க்கட்டும்; வெளிச்செல்லும் நினைவை உள்ளே இழுத்து இறைவன் திருவுருவிலே நிறுத்த முயலும் அந்தப்பொழுதே தாம் பற்றுவைத்த பொருள்கள் ஆயிரம்ஆயிரமாகக் கிளைத்துத் தமது நினைவைச் சூழ்ந்து கவிந்துகொள்வதை எளிதிற்கண்டு கொள்வார்கள். அல்லது கோயிலுக்குள்ளே கடவுளைத் தொழச்செல்வோரைச் சிறிதுநேரம் கவனித்துப்பாருங்கள்; ஆலயத்துக்குள் தொழப்புகுந்த அவர்கள் அந்நினைவைமறந்து உத்தியோகங்களைப் பற்றியும் வியாபார வருமானங்களைப் பற்றியும் கலியாணச் செய்திகளைப்பற்றியும் அரசாங்க இயல்புகளைப் பற்றியும் இன்னும் எத்தனையோ எண்ணிறந்த விஷயங்களைப்பற்றியும் இடைவிடாது பேசிக்கொண்டு செல்வதைக்காணலாம்; கடவுளின் எதிரே சென்று அவர்கள் கைகூப்பித்தொழுகையிலுங்கூடத் தம் நினைவில் வெளிப்பொருட் சிந்தனைகளையே நிரப்பிவிடுகின்றனர். கோயிலுக்குச் செல்வோரிற் பலர், பிறர் தம்மை மெச்சிக்கொள்வரென நினைந்தும், தம்மைக் கடவுளடியார் என்று மயங்கிப் பலரும் தமக்குப் பொருளுதவி செய்வரென எண்ணியும், உலகத்தாரைப் பலவகையில் வஞ்சிப்பதற்கு இஃது ஏற்ற வழியெனக் கருதியுமே அங்கே செல்கின்றனர். உண்மை யன்பால் உள்ளம் உருகி உணர்வை ஒருவழி நிறுத்திக் கடவுளைத்தொழுதற்பொருட்டாகவே செல்லும் உண்மை அடியார் உலகில் மிகச்சிலர். இவற்றிற் கெல்லாம் காரணம் யாது?



புறப்பொருள்களிற் பற்று மிகுதியும் வைத்தலே யன்றி வேறன்று என்க.

அவ்வாறாயின், பற்றுவைத் தொழுகுதலுக்கும் பகுத்தறிந் தொழுகுதலுக்கும் வித்தியாசம் என்னை யென்றால், அதனை முன்னே விளக்கிக்காட்டினேமாயினும் பின்னும் அதனையே ஓர் உதாரணமுகத்தால் விளக்கிக்காட்டுவோம். உலக இயற்கையழகினை நேரேகண்டு மகிழவிரும்பிய புலவன் ஒருவன் ஒருகாட்டகத்தை நாடிச்செல்ல அங்கே ஓடுங் கான்யாற்றின் கரையிலே பசுமையாகவளர்ந்திருக்குங் கொழும்புல்லைப் பொன்னிறமான புள்ளிமான் ஒன்று மேய்ந்துகொண்டிருக்கக்கண்டு, அதன் அழகினையும் அதனைப்படைப்பித்த இரக்கமுள்ள தனிப்பெருங்கடவுளின் பெருங்கருணைத் திறத்தினையுஞ் சிந்தித்தவாறாய் மகிழ்ந்திருக்கும் நிலையே பகுத்தறிந்து ஒழுகுதலாகும்; அப்புலவன் அவ்விடத்தைவிட்டுச் சென்றபின் அங்கேயுள்ள வேடன் ஒருவன் அவ்விடத்தேவந்து அம்மானைக்கண்டு அதன் கொழுவிய தசையைத் தின்ன விழைந்து அதனைக்கொல்லச் சிந்திக்கும் நிலையே பற்றுவைத்து ஒழுகுதலாகும். பகுத்தறிந்தொழுகும் நிலையில் உலக இயற்கையின் அழகையும், அவ்வியற்கையிற் காணப்படும் பொருள்களின் அமைப்பின் திறத்தையும், எல்லாவுயிர்களிடத்தும் இரக்கம் வைத்துள்ள ஆண்டவரின் அருட்டன்மையையும் அறிவதில் கருத்துஊன்றித் தமக்கென ஒன்றையும் வேண்டாமல் அவ்வாண்டவரின் அருள் வசப்பட்டு நிற்பதில் ஒருவரின் ஆன்மமுயற்சி செல்லுதலால், அந்தநிலையிலேயே பழகிவருகின்றவர்களுக்கு அவர்களுடைய புறப்பொருள் அறிவானது அவர்கட்கு எவ்வகையிலுந் தீமையை விளைவியாமல், அவர்கள் அதனை அகத்தே திருப்புங்காலத்து அஃதுஇலேசிலே திருவருளிற் படிந்து நிற்கும். பற்றுவைத்து ஒழுகும் நிலையில் ஒருவரின் ஆன்ம முயற்சியானது பிறவுயிர்களின் நன்மை தீமைகளைக் கருதாமல் தம்முடைய நன்மையையே மிகவுங்கருதி, உலகவியற்கை யழகினையும் அதிலுள்ள பொருள்களின் அமைப்பின்திறத்தையும் அவற்றைப் படைப்பித்த ஆண்டவரின் அருட்டன்மையினையுஞ் சிறிதும் நினையாமல் அறியாமை வசப்பட்டு ஒழுகுகின்றது; இந்த நிலையில் தனக்கென்று எந்தப்பொ

ருள்மேல் நாட்டம் ஓடியதோ அந்தப்பொருள் தனக்குக் கிட்டும் பொருட்டுப் பலவகையால் அல்லல் உழந்தும் பலதீமைகளைப் பிறவுயிர்கட்குச் செய்தும், அதுகிட்டாவிடில் பெரிதும் மனம் உளைந்தும் வருதலால், இந்நிலையில் நின்றவன் தன் பகுத்தறிவுணர்ச்சிகளை உள்ளமடக்கி இறைவன் அருளிலே நிறுத்த முயல்வனாயின் அஃது அவனுக்குச் சிறிதுங்கைகூடாமற் போய்விடும். பகுத்தறிந்து ஒழுகும் நிலையிலோ தனக்கென ஒன்றும் வேண்டிடாமல் உலக சிருட்டிகளை வியக்கும் வழியே சென்று ஆண்டவனை நினைவுகூருந்திறம் வாய்த்தலால், அதுவே ஒருவன் திருவருளைப் பெறுதற்கும் அத்திருவருள் வல்லமையால் மன ஒருமை மிகப்பெற்று எல்லாவுயிர்களையுந் தன் வசப்படுத்தி நல்வழிகாட்டுதற்கும் உரிமையினை உண்டாக்கும். ஆகவே, இவ்வுலகவாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் எல்லாப் பொருள்களையும் பகுத்தறிந்து பெற்றுப் பயன்படுத்தப் பாருங்கள்! ஆனால் அவற்றிலே பற்றுமிகவைத்து அவைகள் எல்லாம் உங்கட்கே வேண்டுமென்று நினையாதிர்கள். "தாளாற்றித்தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு,வேளாண்மை செய்தற்பொருட்டு" என்னுந் திருவள்ளுவனார் திருவாக்கை எக்காலும் இடைவிடாது கருத்தில் இருத்துமின்கள்! ஏராளமான பொருளைச்சம்பாதிக்க முயலுமின்கள்! ஆனால், அப்பொருண் முழுதும் ஆண்டவன்நான் பிறவுயிர்கட்கு நன்மைசெய்தற்பொருட்டு எனக்குத் தந்தருளினன் என்றுகருதி அதனைஎல்லார்க்கும் வழங்கிஇன்புறுமின்கள்! பாருங்கள்! எண்ணிறந்த கோடி உயிர்கட்கு எண்ணிறந்த கோடி உடம்புகளையும், அவ்வுடம்புகளோடு அவ்வுயிர்கள்உலவ எண்ணிறந்தகோடி உலகங்களையும், அவ்வுலகங்களில் அவ்வுயிர்கள் அனுபவிப்பதற்கு எண்ணிறந்த போகப்பொருள்களையும், அப்போகங்களையெல்லாம் நுகர்தற்குஏற்ற கண்செவி மனம்முதலான அகக்கருவி புறக்கருவிகளையும் எல்லாம் வல்ல ஆண்டவன்எவ்வளவு இரக்கத்தோடும்எவ்வளவு கருணையோடும் படைத்துக்கொடுத்திருக்கின்ருன்! அங்ஙனம் அவன்இவற்றையெல்லாம் உங்களுக்குப் படைத்துக்கொடுத்தது உங்களிடம் ஏதேனும் ஒரு கைம்மாறு பெறுதற்பொருட்டா? இல்லையே! அல்லது அவற்றைப்படைத்துக் கொடுத்தமையால் 'தனக்கு ஏதேனும் ஒருநன்மை உண்



டென்று அம்முதல்வன் கருதினனு? அதுவும் இல்லையே! ஏழையுயிர்களுக்கு இன்பத்தைத்தரல்வேண்டுமென்னும் இரக்கம் அன்றே, அறியா வுயிர்களுக்கு அறிவு தரவேண்டும் என்னும் அருள் அன்றே அவனை இங்ஙனமெல்லாம் உதவி புரியும்படி ஏவின! அவன் தனக்கொன்றும் வேண்டாதுஎல்லா வுயிர்கட்கும் நன்மை செய்வதுபோல, நீங்களும் உங்களுக்கென்றே ஒன்றும் வேண்டாமல் எல்லா வுயிர்கட்கும் உதவிசெய்தல் கடமையன்றோ? நீங்கள் பிறரிடம் ஓர் உதவியை எதிர்பார்ப்பதுபோல, மற்றவர்களும் உங்களிடம் ஓர் உதவியை எதிர்பார்ப்பரன்றோ? அங்ஙனமாக, நீங்கள் பிறவுயிர்களின் நன்மையை ஓர்ந்துபாராமல் உங்கள் நன்மையிலேமாத்திரங் கருத்தூன்றிப் பற்றுவைத்தொழுகுதல் என்னே? அப்பற்றினுல் நீவிர் பெற்ற பயன்கள் யாவை? துன்பமுங்கவலையும் இகழ்வும் பழியும் இறப்பும் பிறப்பும் அல்லவா? ஆகையால், **முதலிற் பொருட்பற்றை ஒழிமின்கள்!** பொருள் ஈட்டுதற்கு முயலும்போதெல்லாம் அப்பொருளிற் பற்றுவையாது அப்பொருள் பிறவுயிர்களுக்குப் பயன்படவேண்டும் என்றுபகுத்தறிந்து எல்லா வுயிர்களிடத்தும்நெஞ்சம் இளகி உதவி செய்து ஒழுகுமின்கள்! இங்ஙனம் செய்து வர வர நுங்கள் அறிவு பரிசுத்தப்பட்டு அகமுகமாகத்திரும்பினுல் இறைவன் அருள்வெளியையே நாடி நிற்கும்.

இனி மனைவி மக்கள்மேல் மெய்யன்புகொண்டு, அருமையிற் சிறந்த இவ்வுயிர்களை ஆண்டவன் என்னுடு பொருத்தியது, இவர்களுக்கு நான் உதவிசெய்தும் இவர்கள் உதவியை நான் பெற்றும் மற்ற எவ்வுயிர்க்கும் இடையருத நன்மை செய்தற்கே என்று பகுத்தறிந்து, அவர்களுடன் கூடி எல்லா உயிர்கட்கும் வேண்டும் உதவியெல்லாம் செய்து ஒழுக நினைமின்கள்! ஆனுல், அம்மனைவிமக்கள்மேற் பற்றுமிகுதியும் வைத்து, இவர்களே எனக்குப் பொருள்கள் இவர்கட்கேயான் வேண்டியனவெல்லாம் செய்யக்கடவேன், எவர் எக்கேடு கெட்டாலும் என் மனைவிமக்கள் வாழ்ந்தாற்போதும், யார்குடியைக் கெடுத்தாயினும் என்மனைவிமக்களைச் செல்வத்திற் புரளவைப்பேன் என்னுங் கொடிய பற்றுதல்நினைவை அறவே ஒழிமின்கள்! இங்ங

னம் அவர்கள்மேற் பற்றுவைத்தலால் பிறவுயிர்களைக்கெடுத்து நீவிருங்கெடுதலன்றி, நும்மனைவி மக்களையும் பாழாக்கி ஒழித்து விடுவீர். இங்ஙனம் பற்றுவைக்கும் உறைப்பால் ஒரோவொரு கால் நீர் அகமுகமாக நும் நினைவைத்திருப்பினும், அந்நினைவு நும் மனைவி மக்களையே சிந்தித்திருக்கும் அல்லாமல் வேறு திருவருளொளியைச்சிறிதும் நாடமாட்டாதாகும். மனைவி மக்களுடன் கூடி இல்வாழ்க்கை செலுத்துவதெல்லாம் பற்றுவைத்தொழுகுதற்கு அன்று, பகுத்தறிந்து ஒழுகுதற்கேயாம். இவ்வுண்மையை இனிதுணர்ந்த தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர், "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி, வேளாண்மை செய்தற்பொருட்டு" என்று அருளிய திருவாக்கைக்கடைப்பிடித்தொழுகுதலே இல்லறத்திலுள்ளார் தமது நினைவைப்பரிசுத்தப்படுத்தி ஒருவழியில் நிறுத்துதற்குச் சிறந்த உபாயமாம் என்க.

இனி மக்கள் மனம் இந்நிலவுலகிற் பிறந்தகாலந் தொட்டுப் புறப்பொருள்களிடத்து ஓடி ஓடி அவற்றின்மேற் பற்றுவைத்து ஒழுகுதலால், அத்தன்மைத்தாகிய அம்மனத்தைச் சடுதியிலே அகமுகமாகத் திருப்பப்புகுந்தால் அது சிறிதும் வசப்படமாட்டாது. ஒருகால் மிகவருத்தப்பட்டு அஃது அகத்தே திருப்பப்பட்டாலும், பற்றுவைத்த புறப்பொருட் சிந்தனைகள் ஒன்றன்பின் ஒன்றாக எழுந்து அகநினைவினை மறைத்துக் கொள்ளும். அஃது எதுபோலவென்றால், பாகன்வசப்படாது வழிதுறை தெரியாமல் விரைந்து ஓடும் ஒரு முரட்டுக் குதிரையினைத்திடுமெனப் பிடித்து நிறுத்தப்புகுந்தால், அஃது அதற்குச் சிறிதும் படியமாட்டாது; அல்லது பிடித்து வலிந்து நிறுத்தினும் அதுதனக்குரிய முரட்டுத்தன்மையாற் சினங்கொண்டு பாகனையும் அருகிலுள்ளவர்களையும் உதைத்துக் கடித்துத் தீங்குசெய்யும்; பின்னை அதனை அடக்கும் உபாயம் அறிந்தவன் அஃது ஓடுமிடமெல்லாம் அதனைவிட்டு அஃது அவ்வோட்டத்தால் இளைப்புற்று ஓடமாட்டாது நிற்குஞ்சமயங்கண்டு அதனைப் பிடித்துப் பழக்கி வசப்படுத்துவான்; அதுமுற்றுந் தன் வசப்படுங்காறும் அதற்குத் தீனி முதலியனவெல்லாங் குறை

# குமுதவல்லி, நாகநாட்டரசி

முதற்பாகம்.

இது

சென்னைக்கிறிஸ்டியன் காலேஜில்

முன்னே தமிழ்ப் போதகாசிரியராய்

இருந்த

சுவாமி வேதாசலம் அவர்களால்,

எழுதப்பட்டுச்

சென்னை:

பிரெசிடென்சி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1911.

# PREFACE.



The art of fiction has, in modern times, become a potent means in the hands of educated men to awaken the finer instincts of man, so that this awakening of one's own better part might itself serve to correct his mistakes and render him a useful and helping member of society. Within his mind exist in latency capabilities of various kinds and degrees of which one class is evoked by one particular set of outward facts and another by another set of facts. With such peculiar occurrences of outer world corresponds the manifestation of evil or good character of man. Generally speaking, the evil part of human mind finds itself readily and easily called forth into activity by most of the surrounding objects while its better part, for want of fitting means, rarely gains access into the world outside. Now the most desirable function of a learned man should, as far as his innate abilities permit, have been to touch upon the inmost spring of man's delicate nature and open the doorway to the region of love and virtue. But to go deep down the softest and most fertile part of human nature is not within the power of those unwary scholars who adopt improper means without discrimination. It is only those who are cautious and shrewd, those who spend apparently a greater part of their time in the selection of efficient means, in the making of it, more attractive than it usually seems to be, that accomplish this very significant and well-meaning task. Take any branch of knowledge: philosophy or science, religion or literature, in their hands it becomes a very effective weapon.

Now, of all these instruments of knowledge, the fiction as an interesting branch of art appeals to all classes of people

without effort and aggressiveness, and hence its place is daily becoming more and more prominent amidst them all. In almost all civilised countries but of India especially southern India the art of fiction has made a rapid and nearly a perfect development. But here it is still in its infancy. The host of novel writers are primarily led by mercinary and other motives. No genius has as yet arisen and no novel breathes the atmosphere of true art. In most of the Tamil novels that I have come across, I find neither plot nor character delineation, neither a true representation of life nor a chaste and felicitous diction of language. The story chiefly turns only upon love passion—the love in its most degraded type and gross earthly form. Although the Tamil language is pliant and rich in vocabulary capable of conveying the finest shades of meanings, yet in all the Tamil Novels published in a decade or two the diction is rendered very unwholesome by the introduction of unassimilated foreign words from Sanskrit and other languages and by the unhappy combination of words and phrases. In the matter of happy diction and choicest expression of thought a real and fastidious scholarship is the only necessary requirement; but of this not a single Tamil novel of recent times bears a notable mark. Even the Tamil renderings of some English Novels have been done by inelegant hands in so tasteless a manner that the beauty of the original appears in the new dress transformed into ugliness. Except a few who look upon themselves as civilised and up-to-date, the main portion of the Tamils brought up in a simple and pure life do not like these novels at all. They like to read novels written in a pure and simple Tamil style depicting the nature and human life as found in their experience but agreeably ennobled by the moral elevation of the novelist's ideal thought. Having keenly felt their want I ventured to produce this adapted Tamil translation of an eminent English novel in the hope that the pure and simple Tamil into which the ideas of the original are cast would please the Tamils very much leading them further



and further into an appreciation of the art and study of fiction coupled with their own progress of life

To the Tamilians of yore and their descendants the art of fiction was not an unknown thing before the introduction of modern novel. How carefully this art was studied by them would become manifest from a glance at the critical commentary of Nakkirar on *Irayanar Agapporul* written about the first century of the Christian era. And another poetic work of considerable literary merit like that of Chaucer, I mean Udayanankadai, was already in existence some six centuries before Christ, in which many a tale of Tamil antiquity appears in a collected form each of which, of course, incorporated into the main story with so profound a sense of unity that every one of them looks like so many inseparable limbs in a whole body. Besides this interweaving of one story into the other, the entire poem drawing faithful portraits from real life and tracing the distinctive features of individual character, combine them all to one complex whole so as to impress the mind of the reader with a sense of the strong unifying power of the poet. But it was a poetic age. Even story-telling went on in verse. From the domain of poetry fiction was slowly emerging to breathe the freer atmosphere of prose, when the pernicious influence of Sanscrit broke in upon the mind of the Tamil scholars and vitiated their taste for simplicty of life. A whole series of Puranic legends and obscene myths found their way into Tamil. And the Tamil people of mediæval period having come under the influence of priests began to pay unlimited respect to mythical accounts of Gods and lost all their study of real life and with it the art of fiction also. But fortunately for us the study of English has once more opened our eyes to the real grandeur pertaining to the art of fiction; and once again has the unwholesome contact of Sanscrit begun stealthily to sap up the vitality of the Tamil language. I need, therefore, hardly say that it is obligatory on every son of the Tamil country to wake up from his long indifference and do his

utmost to render his services in the cause of his own mother tongue Tamil which is, in fact, one of the few highly cultivated ancient languages of the world. I have great pleasure in saying that the following Tamil adaptation of a famous English novel was done by me to my greatest satisfaction and it is for the reader to judge how far I have succeeded in preserving the profound artistic skill of the English author in chaste, easy and elegant diction of Tamil.

THE SACRED ORDER OF LOVE,
PALLAVARAM,
*1st of May 1911.*

VEDACHALAM.

---



கைமீர், அம்மக்களை அக்குடிசைக்கு எடுத்துக்கொண்டுபோக உதவி செய்யும்பொருட்டு இப்போது விரைந்துபோகின்றேன். கட்டாயமாய் வேண்டிய அளவுக்குமேல் ஒரு நிமிஷமேனும் யான் அங்கு நீட்டித்திரேன் என்று உறுதியாய் நம்பியிருங்கள்." என்று கூறினான்.

மறுபடியும் அப்பௌத்த இளைஞன் ஊக்கம் மிகுந்த தன் குதிரைமேல் ஏறிப்போயினான்; அவன் காதுக்கெட்டுந் தூரங் கடந்து சென்றபின், "அவ்வளவு கருணையோடு தரப்பட்ட வழித்துணையை நாம் ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு செய்யக்கூடியதில்லை." என்று குமுதவல்லி மொழிந்தாள்.

ஒரோவொருகால், தன் நினைவுகளின் கன்னிமைத் தூய தன்மையோடும்—மிகநெடுந்தூரம் அல்லா மேற்கணவாய் மலைகளின்மேல் எந்நேரமுந் தங்கியிருக்கும் பனிபோல் தூயதான தன்னுயிரின் இயற்கைக் கற்புடைமையோடும்—அவ்விளங்கன்னிப்பெண், நீலலோசனனைப்பற்றி இன்னும் ஏதோமிகுதியாய்க் காணவேண்டும் நினைவிலே மெய்யாகவே வெறுப்படையாத ஓர் இரகசிய எண்ணந் தன்னுள்ளே கொள்ளப்பெற்றாள். ஏனெனில், ஆண்பாலாருள் அழகால் மிக்கவரென்றும் பெண்பாலாருள் அழகால் மிக்கவரென்றும் நன்குமதிக்கப்படும் இளையோர் இருவர், ஒருவர் ஒருவர்மாட்டு ஏதோ சிறிதுபற்று உண்டாகப் பெறாமல் இங்ஙனந் தற்செயலாய் ஒருங்கு கூட்டப்படுதல் கூடாததேயாம்.

நீலலோசனன் திரும்பிவரும் முன் ஏறக்குறைய இரண்டரை நாழிகை கழிந்தன; இப்பொழுது அவன் ஆட்கள் இருவரும் அவன்பின்னே வந்தார்கள். அந்தப்பெருமாட்டியோடும் அவள் தோழிப்பெண்களோடும் சேர்ந்து பயணம்போகும்படி ஏற்பாடுசெய்யப்பட்டதென்று முன்னமே அவன் அவர்கட்குத் தெரிவித்தான். இச்செய்தியை வியாக்கிரவீரன்மகிழ்வோடு கேட்டான், ஏனென்றால், பெண்பாலார் கூட்டத்திற் சேர்ந்திருப்பது அவனுக்கு இனியது; மற்றுக் கேசரிவீரனோ இதனைக் கேட்டதும் தன்முகத்தின்மேல் துயரக்குறிப்புஉடையவனானான். தன் வாலிபஎசமானன் பொய்ந்நெஞ்சுள்ள மற்றொரு மோகினிப்

